கள்ளவன சத்திலகு பிள்ளையோ திமமெழுபு ககனமேற் சேற லேய்ப்பக்
கைக்கமல முற்றொளிசெய் நித்திலவம் மானைமேற் கடிதுசெல வாக்குநறவ
வெள்ளமினவண்டுகெளிகொள்ளநனியுண்டுவிரைமென் மலர்க்காந்தணின் று
மேலெழுதல் போலவரு நீலமணி யாலொளிவி ளக்குமம் மானை யமுத
வள்ளநிகழ் காழிமணி தெள்ளுதமிழ் வாழமகி மலர்வாயி னூட்டு செங்கை
மலர்நின் றுமேற்செல்லமலர்வீதியிருபால்வயங்குமணிமாடமெங்கு [ருளே
மன்னொளிசெய்தில்லையருள்வெள்ளநிறை † வள்ளிசிவையம்மானையாடிய
யண்ணலின் புறவாம நண்ணிமன் சிவகாமி யம்மானை யாடி யருளே. (௩)

வயிரமணி யாலியற் றியபலவும் வண்டாள மாமணியி னுலி யற்றம்
மானைபல வுங்கமல மலர்வாட்டி மிளிர்செங்கை மலர்நீட்டி மேல்வி டுத்த
லியலுருவம்வியலருவமுயலருவவுருவங்களெவையுங்கடந்தொர்விண்ணே
யெழின்மேனியாக்கொண்டுதொழுமாபன்மார்க்கர்களுமெங்கணுநிறைந்து
யுயவருணிறுயகற்கமுதகவளங்கள்பலவொண்கைமலர்நீட்டியூட்டி [நின்றே
யுழுவலன்பினர்செய்சபரியைமுறைவிளக்குதலையொக்குமாலிக்கும் வெட்
யல்லலுறுசொல்லிநிறைதில்லையருள்வல்லியுமையம்மானையாடியருளே [இ
யம்மைநலன் மெய்ம்மைநல னிம்மையரு ளம்மைமணி யம்மானை யாடி
[ யருளே. (௪)

வேதநான் கேயவைக ளோது மார்க் கம்பலவி ளங்கலினவ் வேத முடியாய்
விளம்புவேதாந்தமும்பற்பலவகைப்படவிரிந்தொன்றையொன் றுதழுவா
தேதமார் சைவர்பக் குவநோக்கி யவரவாக் கிசையவோ ரொன்ற ணிப்பித் *
திதமாக வவ்வளவி னீர்த்துமே லேற்றிமெய் யின்புபின் னன்பி னருள்வா
ளுதனேவைத்தனளவ்வகைகளென் றுண்லமநூலனன்மையோர்ந்தவைகட
நண்ணுசோபானமாத்தழுவுசித்தாந்தமேநவையில்பேரின்புதருமென் [னிகழ்
¶ ஆதமார் சைவர்புகல் சீதமார் தில்லையா சம்மானை யாடி யருளே
யன்பர்பலர்முன்பரவுபொன்பெய்சபையின்பசிவையம்மானையாடியருளே.

ஓதுக வேதா கமதா சைவமெய் யொளிதிகழ் வேதாந்தத்
துண்மைம றைத்துநி ராலம் பாதிய வோதுப சாரநிலை

---

† வள்ளி—கொடையுடையாள். * அண்ணிப்பித்தல்—இனிப்பித்தல். அது, "அண்ணிக்குந்தீங்கரும்பை" "கருப்புத்தூரினுமண்ணிக்கும்." "ஆகமமாகிநின் றண்ணிப்பான்." என்ற தேவாரதிருவாசகங்களாற் காண்க.

¶ ஆதம்—விருப்பம். அது, "ஆதமிலிநாயேனை" யென்பதாதியாற் காண்க.

வேதமு டிப்பொருண் மெய்யென வோதுநர் வேதனை யாற்றுமே
வீண்டுற வுறுமக பதிநிலை நோக்குபு விண்குரு வோதுமத
பாதக நாலுமெய் யென்பர்கொல் வீயுடல் பாய்பொறி யாதிக்கே
பரமெனு மவாணி மையினுற வவையல பரமுயி ரெனன்முகம
ருதலை யுய்த்துணர் கென்றரு ளம்பிகை யாடுக வம்மனையே
யங்கணர் பங்கமர் மங்கலை யங்கணி யாடுக வம்மனையே. (௬)

யாங்கள் செய்தக்கன வல்லன வோர்த்தருள் கென்றரு டக்கைதபர
மிறைஞ்சிவி னுவிய நன்குண சூரனை யேயிமை யோர்க்குமுழுந்
தீங்குசெய் வன்குண னுக்குமு பாயமி தேயென நீபிரமர்
தீமைகள் யாவுமி யற்றத னுமொரு தீவினை யேதமுநின்
பாங்குமு ரூபர முயிர்செக நாகுபொய் பண்ணவர் நின்பகைஞர்
படர்புரி கெனவசு ராசிரி யன்புகல் பவைசம யோசிதமா
வாங்குரை நெறிபல நெறியென வோர்ப்பவ ளாடுக வம்மனையே
* யண்டர்கடொண்டர்கள்பின்செல்பொனம்பலையாடுகவம்மனையே. (௭)

அர்ச்சுந ராமர்கள் போர்நிலை பார்நிலை யாற்றலொன் றேகுறித்தல்
வமயமு ரைத்தது முகமனெ னப்படு மன்றிமெய் யன்றதனை
யிச்சைமி குத்தா னர்ச்சனை யாற்றிம னிவனிறை யாமடிமை
யென்றுமெய் யோர்த்திடு கண்ணரு மண்ணா சிடர்தரு மெனவிட்டே
பெச்சமி லின்னருள் பெறுமுது தவமென வேடொன் வசிட்டருநா
மேபர மெனபதொ ழித்தடி மைத்திற னெய்திமெய் யன்பினரா
யச்செய னிற்றலி னோர்கென வருள்பவ ளாடுக வம்மனையே
யாயிர மூவர்கள் வாழ்பதி மேலவனை யாடுக வம்மனையே. (௮)

தாருவி னேர்கிளை காட்டுபு மேற்பிறை தான்காட் டுறுசாகா
சந்திர நூலா ருந்ததி நோக்கிடு தன்மையின் முன்னெளிதாய்ந்
தோருக பின்புமெய் யென்றுசொன் ஞாயம தொத்திட வொண்பரமே
ருணர்வரு மந்தர்க ளுயிர்பர மென்றுமு னோர்ந்தலீ நூனமுற
றேருபு பின்பழு தில்பிர மந்தனி தெளியவு ரைத்தமறைச்
சிரங்கணி ராலம் பாதிய வென்றுமெய் தேற்றுறு சித்தாந்த
வாரமு நூட்டிவ ளர்த்தரு ளுலகனை யாடுக வம்மனையே
யம்புலி யூரம ரும்பர னுயகி யாடுக வம்மனையே. (௯)

---

* அண்டர்—எழுவாய்.

சீவர்களைப்பா மென்றுசில் வேதசி ரங்களு ரைக்குமது
செப்புகி ழங்கெழு தாமரை யினையது சேணெழ வாதரவாய்
மேவிய சேற்றினில் வந்ததெ னும்பொருள் விரவுபங் கயமென்னு
விளம்பலின் யாங்களு மிறைபரன் மலரடி மிசையண சீவர்களை
யோவற வாற்றிடு மொப்புமை யாவென வோரார தகந்தைநிலை
யுற்றொரு நாம்பர மென்பவ ராழ்நரகுற் றொருவா ரென்மீற
யாவது ரைத்தரு டில்லைந கர்ச்சிவை யாடுக வம்மனையே
யந்தரி சுந்தரி நந்திரி யம்பகி யாடுக வம்மனையே. (௬0)

அம்மானைப்பருவம்முற்றிற்று.

## நீராடற்பருவம்.

மூவகைய சீவர்களி னறிவுசெய லுகர்வுநீ முன்னறிந் தாற்றி யுண்டான்
முற்றுமென நுகருமா நுகரொனுஞ் சுருதிமுதன் மொழிதலா லனைய சீவர்
தேவர்முனிவோர்முதலயாவரும்போற்றுநின் றிருவிழாச்சேவைமுறையே
செய்திவிய தெரிசனப் பேறுபெறு வான்றநு தினத்தின்ப வாரி தோய்ந்தங்
கோவிலரு ளாலென்றும் வாழ்கவெனவேதிருவுளங்கொண்ட நீயு முன்ன
ருண்மையா னந்தவா ரிதிதோய்ந் தாளுற்றுதலையுலகநேர் காணவென் றுஞ்
சிவனநி றைந்துநிலை மேவுசிவ கங்கையரு டிகழுநீ ராடி யருளே
சிவனுருவின் மருவுசிவைசிவனுருவமெனுமனையசிவகங்கையாடியருளே. (௧

பகைவனைத் தெறுமுபா யம்பகா விருளிற் படர்ந்திற் புகுந்த குருவைப்
பகையென்று பாசமுய்த் துயிர்கொன்ற பாதகப் பயன்வந் துடற்றமேலு
மிகல்வலிக் கடியொன்று காமடித் துணைகண்ட மியையப் பிணித்தி றுக்கி
யிருங்கடலின் வீழ்த்தநொந்தினைகின் றவருணற்கிரக்கமிகுபொற்சபேசன்
றகையுமப்பாசத்தை நீக்கியாங் கனையனைச் சார்பாத கந்தொலைத்துத் [லாந்
தண்ணருள்செய்தற்கிடமதாய்நின்ற வண்கடற் றண்டுறையி தென்றுலகெ
தொகுமனைய பாசமத றுத்ததுறை மேவியத் தூயநீ ராடி யருளே
சுத்தசத் துவமேவு பத்தர்கட் கருடேவி தூயநீ ராடி யருளே. (௨)

கருமமே பிரமமென மேற்கொண்டு பதடியிற் கழிதவம் பூண்டு நின்ற
கன்மடர்க ளாறெறு யிரவரைப் பன்னெடுங் காலஞ்சு மந்த வதனால்
வருபெருந்தோடத்தினாற்கொலொருசிறுவரைவகிக்கொணாதாழ்ந்தநாக
வனமுதலபதியெலாம்வந்துவந்திறைஞ்சவம்மாநடனமறைசொல்சிவனே

யருள்பிரம நாமடிமை யென்றசித் தாந்தசை வாதியர்க ளிரவு புலிமு
வாயிரவ ராதியரை யேசுமந் தனவரத மலைவறவ கித்துநின்றே
மருவுநல நிறைதனிடை நிலைகொடில நிலவுபுலி மடுவினீ ராடியருளே.
வள்ளமுது புகலிமணி கொள்ளவரு ளிறைவிபுலி மடுவினீ ராடி யருளே

மகவாகி வந்தபொழு தேதாதை தனைவிணவி வந்துநீ ராடியோதி
மலர்மூல நாதர்திரு வடிபேணு ருமுனுஞ் மார்த்தபூ சனைசெய் தாற்ற
னிகமாகமஞ்சொன் முறையெனநாடி மேற்றிசையினி றுவியோரிலிங்கமத
நித்தியாதியபூசைமுக்கியாங்கம்மெனநிகழ்த்துநீர்நிறைதண்வாவி [னேர்
யிகபோகபரபோகமூழ்குநர்க்கினிதருளுமியல்பதாவொன் றுதொட்டாங்
கியல்பூச னுதினமிகவாதி யற்றிவீற் றிருந்திரணி யனைமுனோர்க் * கந்
திகமாக வுய்யுநெறி தருவியாக் கிரபாத தீர்த்தநீ ராடியருளே
செல்லரியபல்லுயிருய்வொல்லைதருதில்லையுமைதிவியநீராடியருளே. (௪)

தாருவன மாநடன நேர்கண்ட வானந்த சலதிதோய் மால்சொ லாலத்
தண்கயிலை நோற்றான தருள்வழியி னுற்பதஞ் சலிவடிவ னீண்டு வந்து
மேருவன மாமலைக் கொழுந்தா யெழுந்தொளி விளங்குதிரு மூல நாத
விமலபூசனைபுரீஇயான்மார்த்தசிவலிங்கமேற்றிசையினிறுவியதனேர்
கூருவன மார்வாவி யொன்றுதொட் டன்னநீர் கொண்டுபூ சித்த மர்ந்து
குளிர்நடங்கண்டுலகெலாமுய்யவென் றுமிதுகுயிற்றியருளுகவிங்கெனுந்
தேருவன பல்வரம் விழைந்துகொ ளனந்தன்மா தீர்த்தநீ ராடி யருளே
தில்லைவன மேவியருள் செல்விசிவ காமிசிவ தீர்த்தநீ ராடி யருளே. (௫)

வேறு

வண்டு படிசெவ் வனசஞ்சை வலநீ லங்கு முதம்பவளம்
வளைநித் திலமம் புயமுகுள மடித்து வருவண் டிரைசுழிகண்
மண்டு பமர வொழுங்கலவன் வரால்கள் கமட முதலாடல்
வாரா விருந்தாய் நினதங்க வகையா யுறுதம் மினங்கள்வரக்
கண்டு மகிழ்ச்சி கொண்டாடுங் கவினீ தெனவண் கவிஞர்சொலக்
கருணைமுகமு னவயவநற் காட்சி நோக்கி யெளி ‡ துய்யத்
தொண்டர் நாக சேரிநிறை தூநீ ராடி யருளுகவே
தொல்லை யகற்றுந் தில்லையுமை தூநீ ராடி யருளுகவே. (௬)

* அந்திகம்—சமீபம். ‡ தொண்டர் உய்ய என்க.

மறையா கமமா தியினுண்மை வயக்கு சாமு சித்தநிலை
மணியாய் மூவா யிரத்திலங்கோர் மணியைப் பகலிற் குருடாதி
நிறைமா மனுவி னீர்த்தருட்கை நின்றுங் கொழுகா ரமுதுதவி
நீகொற் றவன்வாழ் குடியமர்தி நேர்பக் குவர்க்காங் கருளியெனுந்
தறைவான் பரவு மறைஞான சம்பந்தாசா ரியசைவத்
தனிமா மணிவீற் றிருந்தருளுந் தகுசீர்த் திருக்க ளாஞ்சேரித்
துறையார் பிரம தீர்த்தநிறை தூநீ ராடி யருளுகவே
துகடீர்த் தருள்சீர்த் தில்லையுமை தூநீ ராடி யருளுகவே. (எ)

கருத்து விருத்த மாதல்சுக ளத்தி யிடையோர் விலர்செயலே
கற்பன் றெனவோர்த் தணிமையினங் காதன் மருகி களுங்கலந்து
விருத்த மறவாழ் கின்றனர்நாம் விரிநீர்த் தேவி யதிசெய்த்தாய்
வியோம கேசாக் கிரத்திருப்ப விமலன் வாமத் தணித்திருந்தல்
பொருத்த மலவீண் டவளுடனுய்ப் புரிந்து கலந்து திளைத்துமெனப்
போந்து தோய்ந்து மகிழ்தியெனப் புலவ ருன்சீ ரெடுத்துரைப்பத்
திருத்த முறுதண் சிவப்பிரியைத் தெண்ணீ ராடி யருளுகவே
தில்லை நகர்வாழ் செல்விசிவை தெண்ணீ ராடி யருளுகவே. (அ)

பித்தி லிகித பிரணவத்தும் ¶ பிரிவி லருளோக் காலு ருவாய்ப்
பிறங்கி யருளும் பெருவயிற்றுப் பிள்ளை கனைந்து [illegible]
துத்த வுதவி தனைப்பனைய சுமுக மகவி னைப் பிரியத்
தூய மகவென் றேவருளாஞ் சுத்தோ ததியா யுறவளித்தாய்
பத்தி தருமவ் வுபமனிய பகவ னுகர்பண் பாலுனக்கும்
பற்று மிகுஞ்செந் நாப்புலவர் பகர்தென் சுருதி யும்விளக்கு
சித்தி தாலோர்க் கலதுய்யத் திருப்பாற் கடனீ ராடுகவே
தில்லை நகர்வாழ் மாதேவி தெண்ணீ ராடி யருளுகவே. (கூ)

சிவ ரொருபான் றிசையினராய்த் திகழ்தலாலோ வீரைந்து
திறத்திற் றிரியா திகளைவெலுந் திறமூழ் குநர்க்காங் கருளுதலை
மேவ விளக்கி யுய்த்திடற்கோ விழைந்து படியு மன்பினர்க்கு
விரவுகுணம் பத்தளித்தவரை விமல பத்த ராக் கிடற்கோ

¶ உம்—உங்களுடைய

வோவி லருள்கூர் தில்லையிடத்தொருபான் றீர்த்த மமைத்தனையா
லூதக மவற்று ணின்வடிவா யொளிரும் பரமா னந்தவருட்
கூவ மிதனி லுலகுயுமா குளிர்நீ ராடி யருளுகவே
குலவு வளங்கூர் தில்லையுமை குளிர்நீ ராடி யருளுகவே. (௧௦)

# பொன்னூசற்பருவம்.

---

பலகோடி யண்டபுவ னங்களின்வ சிக்கின்ற பந்தமல சீவ ராசிப்
பகுதிகளை யெண்பத்து நான்குநூ றாயிரம் பகபேத நாற்றோற் றமேழ்
நிலையாக வருகின்ற நிலையற்ற வுடலமென நிகழூச லிடைவைத் துமே
னிகளமா மிருவினைக் கயிறார்த்து மேலுமது நீடுதொடர் பற்ற போதே
யுலையூசல் கயிறுதா னற்றிடற் றாய்தரையெ னூரியமெய் கண்டசுருதி
யுண்மையுல குணரவே வண்மை மலரடியின்க ணுப்புமா தாங்கி யருளும்
புலவோர்கள்பணிதில்லைநகர்வாழுமொருசெல்விபொன்னூசலாடியருளே
பொற்சடிலர் சிற்சபையி னிச்சமொளிர் பச்சைமயில் பொன்னூச லாடி
[யருளே. ௧,

ஆற்றுதவ மென்மைவன் மையைநோக்கி யவரவரை யரியயன் முகுந்தனுதி
யமரேச ராய்வீற் றிருப்பவாங் காங்குநீ யாணைதந் துய்க்கு முறையுஞ்
சாற்றுமிப் பதவியெம் மன்னைசிவ காமசுந் தரிதருங் கருணை வலியாற்
சார்தரப் பெற்றனே மாதலா லனையசிவை தாண்மலர் வழாம லென்றுந்
தேற்றிவழிபடினன்றி நிலைபெறுவெனும்வாய்மைசேருமதிகாரமல * மாய்
செருக்கால் மறந்துநா மேபிரம மெனமாறு செய்யினப் பதவி மாற்றிப்
போற்றருளி னூற்கிழி ழிச்சுமுறை யுங்காட்டு பொன்னூச லாடி யருளே
பொன்னம்பலத்தமருமின்னங்கயற்கணுமைபொன்னூசலாடியருளே. ௨,

பற்பலசு ரர்க்கிறைமை யப்புவன வாசிகள் படிந்தவரை முதல்வ ராக்கொள்
பாங்கினின் றுய்யவுப சாரமா வுரைபொதுப் பழமறைக ளொன்கு காலாய்
நிற்பவா றங்கங்கள் சூழ்சட்ட மாமுகம ணிகழ்த்தெனைய வேதாந் தமா
நிகரநாப் பட்பரப் பாகமே லுண்மையாய் நிலைசைவ வேதாந் தமே
விற்பரவு பீடமாய்த் திகழவத் தெளிவென் றுமேலையோ ரோதுவாய்மை
விளக்குசித் தாந்தமே யளக்கிலா னந்தமலர் மெல்லணைய தாக வதன்மேற்
பொற்புற விருந்தருளியெம்மையாளம்மையேபொன்னூசலாடியருளே
பொதுவமலர்சதமகிழநகியுறவுதவுமனைபொன்னூசலாடியருளே ௩,

---

* மாப்—வினைத்தொகை.

தாயர்பலர் மெய்யுரு வாயொருப தாயமதி தாங்கியொர் துளைந்து யோனி
தன்வழிப் பெறவந்த பன்னியர்களைப்புணர்ப்பு சாம்பருச லவர்க ளாதி
சேயர்களை யவ்வழிப் பெற்றமா வாதிபல தேவரிற்பி றப்பிலாமா
தேவருளை வாமபாகத்தென்றும் வைத்துமத் தேவர்கா மாதி நீக்கி
தூயகா மாரியாய்ப் பிரணவ புலிங்கமேற் றோற்றுவித் தருளு நங்கள்
சுமுகசண்முகர்கடமையுலகர்சந்ததியாதிசுகவாழ்வுபெற்றுவினைகள் [ ளே
போயகன் றுய்யவொளிர்தொட்டில்வைத்தாட்டுமயில்பொன்னூசலாடியரு
பொற்சபையி லற்புதைபொன் வெற்புதவு சிற்புதல்வி பொன்னூச லாடி
[ யருளே. ௪

சிறையளிக ளறைபருகி யறையினிசை நிறைதருஞ் சேண்செல்கா விரிசீ
தெய்வகாவிரியணியதுய்யவாவித்தடத் தினினீடுசெயலைமேவி [ மூல்வாய்
நிறைசெயலை யந்தாரு வினையரிது தைந்தாடு நோமத் தாரு முருள
கொங்கள் விகசித்து நிலமெங்கும் வருடிக்கு நிலையம்பொ னூபு ரச்செம்
மறையொலிசெயுன துபதபரிசமெவ ரிடையுறினு மற்றவரு ளச்சி மிழ்ப்பு
மாறிமலர் வுற்றலகின் ஞானம்வரு டித்தலை வயக்குமா னுலக மெல்லாம்
பொறையுயிர்த்தருளன்னைமலையளித்திடுமுன்னைபொன்னூசலாடியருளே
புலியொடாவுலகமுயுநிலமைதருதிலையிறைவிபொன்னூசலாடியருளே. ௫

மலரயன் முராரிமுதல்வானவர்கண்மானவர்கண்மாமுனிவராதியோர்க்கு
மாண்குருத் துவம்வாய்ப்ப தெவன்றியா னத்தனைய மாதேவ பரம குருவி
னிலகருட் சத்திநீ யெனல்காசச் செங்குவளை யினின்விளக் குபுபன்முறையு
மினிதுணர்த்தருள்கிள்ளையுறுகரத் திலகவைத்தெவையுநீசெய்துகாட்டி[ மு
ன லதுயிர்செயாவென்றுசெபவடமதோர்செங்கையலர்வைத்தநெறியினின்
ரடிநிழலில்வாழ்வரெனவொருகைகீழ் நீட்டியோர்த் தருளிறைவி யுண்மை
[ யோர்ந்த
புலவர்புகழ்தருதில்லைநகரில்வருமொருசெல்விபொன்னூசலாடியருளே
பொங்குவிடமுண்டபரனன்குசுவைகண்டகழைபொன்னூசலாடியருளே.

மந்ததர மந்தர்நி விரசட விரதரென் வகையசி வர்க்கு ணர்த்தல்
ஞ நசரிவை யாவர்கிரி யாயோகர் ஞானநிலை வாய்மையர்க் குணர்த்து மரபு
முன்றுறக் கேட்டல்சிந்தித்தறெளி வேநிட்டை முறையுய வயக்கு மாண்பு
முதியுசா லோகசா மீபசா ரூபசா யுச்சிய மளிக்கு முறைமை

யிந்நால் வகைகணீ யேயருளல் காட்டியாங் கியம்பியருண் மின்னொ கழு
ரிணிபசெபவடநீட்சிகொண்டொற்செங்கைமலரிலகுசிவகாமியனையே
புந்திமகிழ் செல்வர்களு வந்துபணி தில்லையுமை பொன்னூசலாடியருளே
புறறரவ ணைத்தவர னுக்கிடனி லுற்றமயில் பொன்னூசலாடி யருளே. ௭

எவரேனு மூழ்குநர்கள் பவவாரி மூழ்காதெ டுத்தின்ப வாரி தோய்வித்
தின்னருள்செய்சிவகங்கைசந்நிதியி லுறலங்கணெய்துநர்க்கருள்வெள்ளநீ
தவறாது நாற்காத் தள்ளிக்கொ டுக்கின்ற தனையவாய்மை காட்டி வதன்மேற்
றளிவீற்றி ருந்தருளி நடமூல நாதர்பாற் றண்மலர்க் கரமி ரண்டே
திவள்வாக வுடனுறைத லவர்பாதி கொளுமுறைமை தேற்றநீவீற்றிருந்தும்
திகழ்குருந்துவமெலடிநிழல்புகுத்துதல்காட்டுசெங்கையேநான்குமுதவப்
புவனேசர் தொழுதில்லை நகர்மேவி யருள்வல்லி பொன்னூசலாடியருளே
புத்தர்மதமந்தொழியவித்தகரையுய்த்தமயில்பொன்னூசலாடியருளே. ௮

மூற்புரிதவத்தினலிப்பிறவிவாய்த்ததுமுகுந்தன்முதலோர்க்கும்வேட்கை
மூதிருமிப் புவனிமா னுடயாக்கை பெற்றநா முத்திக்கு ழைப்ப தன்றி
யற்பபலனுய்த்தொழியு மற்றைநெறியிற்புகு தலவமாகுமென்றொழித்தே
யருணெறிச் சைவசித் தாந்தசீர் மார்க்கமே யகிலமும ளிக்கு மென்னுஞ்
சொற்பாசிவாகமத்துண்மையோர்ந்தத்திருத்தொண்டையேபேணியாற்றுந்
தூயர்போல் வாகாதி சிறுமைக்கு ழாதலத் தொழிலுழவ ரேரி டைக்செய்
பொற்படையினில்லுழுதுசொற்பயிர்செய்தில்லையுமைபொன்னூசலாடிய
பூரணிபு ராதனிநி ராமயர்ப ராவுசிவை பொன்னூசலாடியருளே. ௯. [ருளே

பயிரவியு மாதேவி கௌரிதிரி நயனிபார்ப் பதிசூலி பரைம கேசை
பகவதியி மாசலைபு ராந்தகிம னோன்மனி பவானிசிவை யம்பா நிரா
மயைநரா யணிநீலி கங்காளி நடராச வாமிசாம் பவிகு மரி
மகமாயி சகமாது காத்தியா யனிசிங்க வாகனி சதுர்ப்பு யத்தி
சயைவீரி மாதங்கி தருமவர்த் தனியமலை சத்திசங் கரியெ னுநின் [தாளப்
றண்ணருள் செய் நாமகோ டியினொன்றை யன்பினிற் சாற்றுநர்த் தாங்கு
புயையுரிய தில்லைநகரு தயைவிரியும் வல்லிசெம் பொன்னூசலாடியருளே
புன்னெறிசெலாரிதயமன்னுசிவகாமியுமைபொன்னூசலாடியருளே. ௰

பொன்னூசற்பருவம் முற்றிற்று.

## வாழ்த்து

வேதநெறி வாழநாற் றுறைகடோய்ந் தின்பநிலை மேவுசித் தாந்தம் வாழ
மெய்கண்ட சந்தான தெய்வநா வலகுரவ மேதைமர பாதி வாழ [ வாழ
வாதரமெய் யன்பர்குலம் வாழவெண் ணீறுமணி யைந்தெழுத் தென்றும்
வன்னசோபானம்வந் தின்ன நூல்பாடுகெனவம்பலவனருண்முன் வாய்ப்ப
வோதுசிவ காமசுந் தரதீட்சி தாதிதிரு வுடையவந் தணர்கள் வாழ
யுண்மையன் புற்றடிய னயாது பூசாதி யுரியதொண் டாற்றி வாழப்
போதமலர் தில்லைமா தேவியிந் நூனினது பொன்னடிச் சார்ந்து வாழப்
பொற்சபையி னிற்பானை யற்புறநடத்துபசி பூரணி யருளு வாயே. கக.

இத்தகுபிள் ளைத்தமிழ்செய் வித்தவரு ணர்ச்சகரெ னிதயத்தி ருந்து வாக்கி
னிடையுற்ப வித்தனையெ மன்னைநீ நின்னருளி னின்பமக வாதியிட்ட
சித்திபெறு வானிதனை யச்சிறுயித் தெங்கணுந் திகழப்ப ரப்பி யன்பு
செய்விசுவநா தன்வேட்டாங்கருளனின்னருட்செய்கையேயோதலென்னே
துத்தமிறை வாரிதியொர் மெய்த்தவசிந் மாமகவு துய்த்தருள்வெள்ளம்பொ
தோய்கருணை வாரியென வேயருளு நாயக துரந்தரிபு ரந்தரிமுற் [ ழியுமா
புத்தமுத மொத்ததமிழ் வித்தகனு ணற்கமுது பொற்கிணைமு கந்த ளித்த
போதசிவ காமிருக சாதபர வாமிபரி பூரணி யருளுவாயே.



[illegible]

உ

சிவமயம்.

தில்லைச்சிலேடை

# வெண்பா.

பூமாதர் வாழ்தில்லைப் புத்தேட் டிருபொருள் வெண்
பாமாலை சூட்டும் பணியருளுஞ்—சோமேலைப்
பொற்பகத்தின் செய்சோ புரவாயி லாம்பண்முக
கற்பகத்தின் செய்ய கழல்.

மேலைச் சோ என்க. சோ—மதில்.

## நூல்

பூவாரும் பண்ணவரும் போதவரு மாதவருந்
தேவாரம் போற்றுசீர்த் தில்லையே—தாவாதன்
காடகத்த னாடகத்தன் பாளிரு வோர்க்குமன்றி
னாடகத்த னாடகத்த னார்வு. (௧)

பூவாரும் பண்ணவர்—பிரமதேவர். இவர் தெய்வவாரத்தால்துதிக்கும் தில்லை. வாரம்-அன்பு. போதஅரியமாதவா, தேவாரத்தைப்பேணுந்தில்லை யென்க. தாவாது அங்கு ஆன் தக தன் நாடு அகத்து அன்பாளர் இருவோர்க்கு ஆடகத்தமன்றின் நாடகத்தன் ஆர்வுஎன்க. பண்ணவர்-பண்முறை சேர்த்தவரெனக்கொண்டு அதற்கியையப்பொருள் கோடலுமாம்.

வில்லம் பலநடமு மீதுயரு மூதெயிலுஞ்
செல்லம் புலியமருந் தில்லையே—சொல்லிலிங்கத்
தாவா கனத்தன் பகத்தா ரருச்சனைசெ
யாவா கனத்த னகம். (௨)

நடம், (அங்கு)ச் சென்ற அழகியபுலியால் விரும்பப்படும். எயில், செல்லும் அம்புலியும்பொருந்தப்படும்.

மன்னும் பணியருஞ்சேல் வாவியெழும் வாவிகளுந்
தென்னம் பலம்வீழுந் தில்லையே—மின்னிலைவேற்
சேய்மதலை யம்புயத்தான் சேமம் விடப்பணித்தான்
சேய்மதலை யம்புயத்தான் சேர்வு. (௩

பணியர், அழகிய அம்பலத்தைவிரும்பும். வாவிகள், தென்னையின் பலங்கள்வீழப்பெறும். சேயாகியமதலையை பிரமன் சிறைவிடப்பணித்தவன். சேய்மதலை–சிவந்தகொன்றை.

காதும் புறத்தகத்த காரிருளுங் காளையருஞ்
சேதம் பலமடக்குந் தில்லையே—வேதந்
தருவாயான் மாதிடத்தான் றண்கயிலை யாலந்
தருவாயான் மாதிடத்தான் சார்பு. (௪)

இருள், சேதுஅம்பலத்தால்மடக்கப்படும். சேது–செம்மை. காளையர், சேக்களினது பலத்தையடக்கும். தம், ஆறனுருபு குறித்துநிற்கும் அசை.

மாகம் படுக்குமன்றில் வந்தவரும் பைந்தடியுந்
தேகங் கடக்குஞ்சீர்த் தில்லையே—மாகந்
தாமலையுங் கந்தரத்தன் றுணைவர்கோ ளுள்சோர்
தாமலையுங் கந்தரத்தன் சார்பு. (௫)

தேகங்கடத்தல்–பிறவிநீக்கம். தடி–வயல். அதில்தேனுனது கங்கையடக்கிமேலெழும். கங்கு–வரம்பு. மா–கருமை. நாள்சோர்தாப் பொருதகந்தர்

கற்பார் தபதியருங் காரார் விதரணருஞ்
சிற்ப மறப்புரியுந் தில்லையே—யற்பமரு
முள்ளம் பரத்தா ருழுவையரி போற்றுநட
முள்ளம் பரத்தா ருறை. (௬)

கற்பு–கற்றல். தபதியர், சிற்பநூல்களைமிகவிரும்பும். காரையொத்த விதரணர்சுருக்கமறக்கொடைசெய்யும். சிற்பம்–சுருக்கம். உள்ளம் பரத்தில்ஆர்கின்ற உழுவை அரி. உழுவை–புலி. அரி–பாம்பு. யாவராலும் உள்ளப்படுகின்றஅம்பரம்.

நன்கலைக்கல் லூரிகளு நாரியர்மைத் தாரைகளுந்
தென்கலைமா னம்பரிக்குந் தில்லையே—தன்கயிலை
யேயா னடத்திறு னெண்ணுதார் கண்ணுர
வேயா னடத்திறு னில். (௭)

கல்லூரிகள், தமிழின் பெருமையை வகிக்கும். தாளை-கண். அது, அழகிய கலைமானையும் அம்பையும் அரிக்கும். கயிலையைஒத்தஆனைநடத்தி னவன். எண்ணாதார் கண்காண வயாதவன் நடனத்தினன்.

நந்நூ ரகழிகளு நன்னுதலார் வின்னுதலுஞ்
சிந்தூர மங்காட்டுந் தில்லையே—யிந்நூருங்
கோமடரத் தானமர்வான் கூத்தனடி யேனுளத்துங்
கோமடரத் தானமர்வான் கூர்வு. (அ)

அகழிகள், யானைகளை அங்குமுழக்காட்டப்பெறும். நுதல், சிந்தூரதில கத்தால் அழகுகாட்டப்பெறும். அமர் வான் கூத்தன்—விரும்புகின்ற ஆகாசநடனன். கூர்வு—மிகுதி. அது ஈண்டு மிகவிரும்பிவசிக்கும் வாசஸ்தல மென்னுங் குறிப்பு.

சீர்த்தடஞ்சேர் மாதவருஞ் செய்யவன்னர் மெய்யுளமுந்
தீர்த்தம் படிந்தேறுந் தில்லையே—போர்த்திகிரிக்
கோபால னத்தனார் கூர்ந்திறைஞ்ச நேர்ந்தருளுங்
கோபால னத்தனார் கூர்வு. (௯)

உள்ளம், சுத்தமாய்ப்பணிவுற்று உயரும். கோபாலனாகிய நத்தன். கோ பாலன்—நெற்றிக்கண்ணன்.

பாராள் முடிவேந்தும் பாதலமு மீதலமுஞ்
சேராரை யங்காட்டுந் தில்லையே—நேரார்முன்
மாகனகக் கார்முகந்தான் வாங்கினா னோங்குமுடி
மாகனகக் கார்முகந்தான் வாழ்வு. (௧௦)

வேந்து, பகைஞரை அங்குவருத்தும். கீழு மேலுஞ்சேர்ந்தமதில், அழகு காட்டும். ஆரை—மதில். மா கனக கார்முகம்—பெரியபொன்வில். முடியில் மாகம் நகு அக் காரைமுகந்தவன். கார்—நீர். மேகமெனினுமாம்.

மாசகலான் றேருளமு மாணவர்த மாணவமுந்
தேசிகனே யங்கடக்குந் தில்லையே—பூசை
யனைய விதம்புரிந்தா னாதரிப்பா னென்பா
லனைய விதம்புரிந்தா னார்வு. (௧௧)

உளம், தேசுஇகல் நேயங்கள் தக்கும். இகல்—வலி. பூசை—பூனை. (அது) போன்றதன்மையைவிரும்பி ஆதரிப்பான். புரிந்தான்—முற்றெச்சம். புரிதல்—விரும்புதல். அல் னைய இதம் செய்தான்.

ஓதான் குளப்படிநீ ரும்மடவார் தம்மிதழுஞ்
சேதாம் பலங்கொடுக்குந் தில்லையே—வேதாந்த
மோதரியான் றந்திரத்தா லுய்த்துணர்ந்தார்க் கின்னலுற
வோதரியான் றந்திரத்தா ரூர். (௧௨)

நீர், சேதுதீர்த்தபலனைக்கொடுக்கும். ஆம்-நீர். இதழ், ஆம்பலை அங்கு ஒடுக்கும். வேதாந்தத்தாலும் ஓதற்கரியான். தமது ஸ்திரபுத்தியால்நன்கு ணர்ந்தார்க்கு இன்னலுறவோ தரியான். ஆகமத்தான்.

பூம்பொழிலும் வாங்கவியும் போரயரும் வீரர்களும்
தேம்பலா வின்பலமார் தில்லையே—நாம்பிரம
மென்பார்க்கு மாகத்த னென்றுதன தொன்றுணர்த்தா
னென்பார்க்கு மாகத்த னில். (௧௩)

பொழிலில், தேம்பல் ஆ இன்பு அலம் ஆர்-பழம்பூக்களை ஆக்கள் இன்புநிறைய உண்கின்ற. கவிகள், பலாப்பழத்தை உண்கின்ற. வீரர்கள், இளைக்காத இனியபெலம் ஆர்கின்ற. தேம்பல்—இளைத்தல். நாம்பிரமம் என்பார்க்கு மேலாகியகர்த்தன் (தானே) என்றுதனது தொன்மையை உணர்த்தாதவன். என்பு ஆர்க்கும் ஆகத்தன். ஆகம்—மார்பு, மேனியுமாம்.

அவ்வினையொத் தார்மலத்தை யையருமன்னூர்தொழிலுஞ்
செவ்விதியங் காதரிக்குந் தில்லையே—நவ்வியம
ரங்கரத்த ராரு ரலகிலமை யோரென்பா
ரங்கரத் தாரு ரகம். (௧௪)

ஐயர்-முனிவர். செவ்வி—பக்குவம். மலத்தால் தியங்காமல் பக்குவகாலத்தில் முனிவர்கள் வினைஒத்தாராது மலத்தை அரிக்கும் என்க. தொழில், செவ்வையான விதியைஅங்கு ஆதரிக்கும். ஆரூர்—ஆனையுடையார். ஆரூர்—குறையாதவர்.

உத்தாரந்தண் சைவநெறி யுண்மையருந் திண்மையருஞ்
சித்தாந்தஞ் செய்யுஞ்சீர்த் தில்லையே—முத்தாந்
தரங்கத் தரணியார் தானத்தார் போற்றந்
தரங்கத் தரணியார் சார்பு. (௧௫)

உத்தம—உயர்வு. உண்மையர், பரபக்கங்களை மறுத்துச்சுபக்கசித்தாந்தஞ் செய்யும். திண்மையர் சித்து ஆம் தஞ்சு எய்யும். தஞ்சு—பற்றுக்கோடு. அது சிவம். எய்தல்—அறிதல். தானம்—சுவர்க்கம். போற்று அந்தரங்கத்தர் அணியார்

வாரங் கழனிகளு மர்ஞ்கிடையும் பாண்டில்களுஞ்
சீரங் குரம்படருந் தில்லையே—சாரங்க
மேவுங் காரணர் விழிதரால் லாழிதந்து
மேவுங் காரணர் விழைவு. (கசு)

கழனிகளில், சிறந்தஅங்குரம் படரும். கிடையில், சீர்அங்கு உரமாகப் படரும். கிடை-வேதசாலை. சீர்-ஒலி. பாண்டில்-எருது. சீரம்-கலப்பை. குரம்பு-வரம்பு. ஆழிதந்து அங்குமேவுஅரனார். மேவுதல்-விரும்புதல்.

தீக்குரவர் பாற்பலரும் வேதியரில் வேதிகளுந்
தீக்கை யினிதமருந் தில்லையே—தூக்குகுழைக்
காதார நாகத்தார்க் கத்தரிமை யோர்க்கரணாய்க்
காதார நாகத்தார் காப்பு. (கஎ)

தீக்கையை இனிது விரும்பும். வேதி-குண்டம். தீ கையின் கிதம் மருவும். கை-ஒழுக்கம். அந் நாகமாகிய தாரணிந்த புயத்தர். கத்தம்-புயம். அரணாய்க்காக்கின்ற தாரநாகத்தார். தாரம்-வெள்ளி.

மாமறைகள் வாயிலிறு மங்கையர்கள் கொங்கையினுந்
தேமல் கனங்காட்டுந் தில்லையே—காமனை
புரமாய்த்த வம்பகத்தன் போர்க்கும்பனாறு
புரமாய்த்த வம்பகத்தன் பொற்பு. (கஅ)

தே மல்கு அனம்—தெய்வத்தன்மைமிக்க அன்னம். தேமல் பொன்னிறங்காட்டும். கனம்-பொன். மாய்த்தஅம்பகம்—மறைத்தகண். ஆறுபுரங்களை அழித்த விஷ்ணுவாகிய அம்பையுடைய கர்த்தன்.

சேரங்கத் தண்ணுமையுஞ் செங்கமலக் கொங்கலருஞ்
சீரங்க ணுதரிக்குந் தில்லையே—நாரங்கொள்
கையரா வாட்டினார் காதலித்தார் பான்மலமாங்
கையரா வாட்டினார் காப்பு. (கக)

சீர் அங்கண் இலக்குமி. நார் காதலித்தார்—அன்பைவிரும்பினோர். மலமாகியகைக்கின்ற அரவை வாட்டினார்.

வீணையிசைப் பாரகமு மெல்லியரும் பல்கலையுஞ்
சேணிய ரங்கடுக்குந் தில்லையே—வேணியின்க
ணோதம் படுத்தார்சி வோசுமுற்றங் காங்கிதை
யோதம் படுத்தா ருறை. (உ0)

சோரு நூலுணர்த்துந் தேசிகருங் காவலருஞ்
சேராரை யங்கலைக்குந் தில்லையே—நேராம்
வினையா ருளத்தர் விரிந்துமுற்று முட்கொள்
வினையா ருளத்தர் விழைவு. (உகூ)

தேசிகர், சேர் ஆர் ஐயம் கலைக்கும். ஆர்-அரிய. எங்கும்விரிந்து (உலக) முழுதுந்தன்னுட்கொள்கின்ற வில்லையார்(யாவரும்)உள்ளுகின்ற அத்தர்

மாசபையும் வாவிகளு மாதவரும் வான்புகழுந்
தேச மடுக்குஞ்சீர்த் தில்லையே—பேசுமறை
வன்னித் திருக்கரனுர் மாதிடத்தா ரோதுநுதல்
வன்னித் திருக்கரனுர் வாழ்வு. (௩0)

சபை, ஒளியை அடுக்கும். வாவி, தெளிந்த நீரைஅடுக்கும். மாதவர், தெய்வசுகத்தைஅனுபவிக்கும். புகழ், தேசங்களைநிறைக்கும். மறைபேசுக்கினிதிருக்கரனில் ஆர்ந்தமாது. நுதலில் அக்கினிக்கண்ணுடைய அரனுர்

பொங்குமெழின் மங்கையரும் பொற்பணிசெய் சிற்பர்களும்
செங்கற் படுக்குஞ்சீர்த் தில்லையே—யங்கையமர்
தங்கனக வில்லார் சகமொடுங்கு நாளோங்கித்
தங்கனக வில்லார் தலம். (௩க)

மங்கையர், செவ்விய கற்பு அடுக்கும். சிற்பர்-சிவந்தரத்தினங்களைப்பதிக்கும். கையிலமர்ந்த தமது கனக வில். தங்க நகம் எனினுமாம். ஓங்கித் தங்கு அனக இல் கயிலாயமென்க.

நேராரும் போதகரு நீளுமணி மாளிகையுந்
தோராத வற்படுக்குந் தில்லையே—சீராரும்
பொற்பணிய நாகத்தார் போந்திறைஞ்ச வார்ந்தநஞ்சர்
பொற்பணிய நாகத்தார் பொற்பு. (௩உ)

நேர்மைநிறைந்த போதகர், தோராத அல்லையழிக்கும். மாளிகை, தேர் ஆதவனைக்கீழ்ப்படுத்தும். சீராரும் பொற்பு அண்ணிய நாகத்தார்—தேவர்கள். பொன் பணி அந் நாகத்தார்.

பையார் சிறார்களத்தும் பற்பலவா யாலயத்துஞ்
செய்யா வரணஞ்சேர் தில்லையே—மொய்யார்சங்
கங்கையுரர் தங்கையுரர் காதரத்தார் மாதரத்தார்
கங்கையார் தங்கையார் காப்பு. (௩௩)

பை ஆர் சிறார்-இளம்பிள்ளைகள். பைங்குழவிள்ளப்பதிபோல. அவர் கழுத்தில் செய்யப்பட்ட ஆபரணங்கள்சேர் ஆலயத்தில் செப்பமாகிய பிரகாரங்கள்சேர். சங்கம் கையாரத் தங்கையாரிடத்துக்காதாமுடையவர், காதரம்-விருப்பம். மா தாரத்தார். கங்கையையுடையார் தங்கு ஐயார்,

மாதகைய சேதிமமும் வாவிகளுங் காவகமுஞ்
சீதமுற வாகமஞ்சார் தில்லையே—பாதமுடி
யஞ்சனத்தன் காண்பரியா னந்தமிட றுந்துமறை
யஞ்சனத்தன் காண்பரியா னூர்வு. (௬௪)

சேதிமம்—கோயில். அங்குக்குளிர்ச்சிபொருந்த ஆகமஞ்சார். வாவிதன், இலச்குமி தம் உறவாக அழகு ஆர். மஞ்சு-அழகு. காவகம், சீதம் உற அவ்வாகமஞ்சு ஆர். சீதம்—நீர். உற-மிகுந்த. அ-சுட்டு. வாக மஞ்சு-அழகியமேகம். மிடறு அஞ்சனத்தன் மறை அழகிய பரியான்.

மாவகலக் காவலரு மாதளியிற் கேதனமுஞ்
சேவகமுற் றாடலுறுந் தில்லையே—பாவகனிந்
தாதவனங் கண்ணு னகங்கனியார்க் கின்பமரு
ளாதவனங் கண்ணு னகம். (௬௫)

காவலர், வீரமுதிர்ந்தவெற்றியுறும். கேதனம், சேவைத்தன்னிடத்துற்று அசையும். அருளாதவன் அங்கு அண்ணன்.

மண்ணரச ரொண்புயமும் வாளமர்கைக் காளையருந்
திண்ணகத்தி னாடலமர் தில்லையே—பண்ணகத்த
மானத் திராவிடத்தான் மாமிடற்றின் வானமுண்ணு
மானத் திராவிடத்தான் வாழ்வு. (௬௬)

புயம், திண்ணியமலைபோன்ற வெற்றியுறும். காளையர், ஆட்டுக்கடாக்களின் போராடலை விரும்பும். மிடற்றில் வானவரை யுண்ணும்படி நத்திய இராவைப்போலுங் கரிய விடத்தையுடையான்.

கொங்கார்ந்த வாவியும்வெண் கொற்றக் குடைவேந்துஞ்
சிங்கா தனமடுக்குந் தில்லையே—சங்கார்
காத்தனைய னத்தன் கதிர்சோமன் செந்திக்
காத்தனைய னத்தன் களம். (௬௭)

வாவி, குறையாமல் அன்னங்கள் அடுக்கும். சங்கார்காத்தனுக்கும் அயனுக்கும்அத்தன். காத்த—ஒளியுடைய.

நீங்கா திமையோரு நீடுருவிற் பாடளியுந்
தேங்கா தாமடுக்குந் தில்லையே—வாங்கியவில்
லோதியம ரக்கரத்தா னோதியர்மூன் றோடிரண்டென்
றோதியம ரக்காரத்தா னூர். (கஅ)

இமையோர், தேங்கு ஆதாம் அடுக்கும். அளி, தேம் காதா மடுக்கும். வில்லாகிய ஒதி-மலை. ஒதியர் ஞானியர். மூன்று இரண்டு என்று ஒதி விரும்பும் அக்கரத்தான்.

தாரகத்தா ரம்பலமுந் தார்ப்பாதர் சீர்ப்புயமுஞ்
சீரகத்தார் மேவுஞ்சீர்த் தில்லையே—யோகத்தான்
றூய வலஞ்சுழியான் றுதைகளத் தாவியெங்குந்
தாய வலஞ்சுழியான் சார்பு. (கசு)

பிரணவசொருபாது அம்பலம், சிறந்த மனத்தால் விரும்பப்பெறும். பாதர்-வைசியர். தாயம்-உரிமை. எங்குந்தாவியஆணவமலமாகிய அல்லும் அஞ்சும் உழியான். உழி-இடம்.

புக்கின்ப மாநடமும் பூக்கமழுங் காக்களுமண்
டிக்கந் தாம்பாவுந் தில்லையே—மிக்கவுடை
யாசையா றசையா னரா தருள்புரியு
மாசையா றசையா னூர். (சo)

இன்பமாநடனம், மண்ணுலகும் திக்கும் அந்தரமும் (வந்து சபையிற்) புக்குப்பரவப்பெறும். காக்கள், மண்டி மேகம்பரவப்பெறும். ஆசை உடையான். ஆசை திசை. குற்றத்தை யான் பொருந்தாது அருள்புரியும் ஆசையான் பொன்னிறத்தன். ஆசை-பொன்.

தத்தொரந் தருநடமுந் தங்கமலப் புங்கவருஞ்
சித்தம் பாம்புரியுந் தில்லையே—வித்தம்பூ
மாதவத்தை யாதரித்தான் மச்செயனீத் தாரியற்று
மாதவத்தை யாதரித்தான் வாழ்வு. (சக)

நடம், சித்தாகிய அம்பாத்தில் புரியும். புங்கவர்-பெரியார். சித்தத்தால் பாத்தைவிரும்பும். வித்தம் பொன். பூ-பூமி. மாது பெண். இம்மூன்று அவஸ்தையாகிய ஆது அரித்து.

முற்றியசீர்ப் பொற்றசுப்பு முல்லையமர் கொல்லைகளுந்
தெற்றியம ராவுந்துந் தில்லையே—பொற்றொடியா

ரங்கத்த னங்கத்த ஞய்நின் ஞெடுக்கமா
ரங்கத்த னங்கத்த ஞர்வு. (சஉ)

நசம்பு, செற்றிகளில் அமர்ந்து உயரும். முல்லைப்புதல்களையுடைய முல்லைநிலம், அமர் ஆ (யாவரும்) விரும்பும் பசுக்கள். செற்றி-செறிந்து. உகதும் செல்லப்பெறும். (எல்லாம் ஒடுங்கும்) அங்குத்தலைவனும் நின்று தன்னிடத்து ஒடுக்கிய அமரர்களின் என்பையணிந்தவன் நம் கர்த்தன்.

பம்புமொளி யம்பலமும் பந்தரு முன் றந்தையார்
செம்பியன்மாட் டங்கடுக்குந் தில்லையே—நம்புவட
பாதவத்தன் மாதவத்தன் பாளர்சென்னி யிற்பதிக்கும்
பாதவத்தன் மாதவத்தன் பற்று. (சங)

அம்பலம், செம்பியன்முன்தந்த ஐ ஆர் மாட்டினல் அடுக்கப்பெறும் மாடு-பொன். அடுக்குதல் ஈண்டுவேய்தல். பந்தர், முதன்மைபெற்றதந்தையாரது செவ்விய பியலிடத்திவர்ந்து அங்குஅடுக்கும். பியல்-பிடர். பதிக்கும் பாத அஸ்தன். மாதையுடைய பாதியன்.

தங்கியசார்த் தூலபதர் தம்மகமுந் தாபதருந்
சிங்கவன்ம னங்கடுக்குந் தில்லையே—மங்கையொரு
பாகத்த ராகத்தன் பாகத்தர் போற்றுபருட்
பாகத்த வாகத்தன் பற்று. (சச)

தாபதர், அல் சிங்கும்படி மனசை முனிந்திழுக்கும். பாகத்தர்-பக்குவர். அருட்பாவை யணிந்தபுயத்தையுடைய வாகு அத்தன். வாகு-அழகு.

ஒன்றுதுணை வர்ப்பிரியல் லோதியரு மோதியருந்
தென்றலையா னைக்கடுக்குந் தில்லையே—புன்றலைய
பூதப் படையான் புகன்மூ விலைவடிவப்
பூதப் படையான் புரம். (சரு)

அல்லோதியர், தென்றலையும் ஆனையும் முனியும். ஒதியர் யமனைமுனியும். சிறிய தலைப்பூத சைனியத்தையுடையான். பூதமூவிலை வடிவப்படை--பர்சத்தமான சூலாயுதம்.

மாவலங்க வம்புயத்து மைந்தருமன் னூர்நடையுஞ்
சேவலங்க ணுட்டுஞ்சேர்த் தில்லையே—மேவுசக
காரணத்த னரணத்தன் கட்பூதத்தன் பொற்சடைக்கட்
காரணத்த னரணத்தன் காப்பு. (சசா)

மைந்தர், சேவலை அங்கண் போராடச்செய்யும். நடை, சேவின் வலத்தை தன்கண்காட்டும். சடையில் கார்அண்இத்தன் ஆரணத்தையுடையவன் கார்-மேகம். நீரெனினுமாம்.

புண்ணியத்தொண்டராற்றுநரும்பொற்பணிசெய்சிற்பர்களு
திண்ணகக்கை யாலாற்றுந் தில்லையே—தண்ணிதழித் [ங்
தாரகத்த னேரகத்தன் றன்மடியுற் றேறுதியமெய்த்
தாரகத்த னேரகத்தன் சார்பு. (௪௭)

தொண்டர், திண்ணிய மனவொழுக்கத்துடன் ஆற்றும். சிற்பர், திண்ணக மென்னுங்கருவி பிடித்தகைபிறைற் செய்யும். இதழித்தாரணிந்த கர்த்தன். நேராளமனசில் வசிப்பவன்.

பம்பியபோர் வீரர்களும் பண்புறுதொண் டன்பர்களுஞ்
செப்புலமே விப்புரியுந் தில்லையே—யம்பவள
வண்ணத்தா னத்தன் வயங்கும் பதாகையமர்
வண்ணத்தா னத்தன் மனை (௪௮)

செம்புலம்—யுத்தகளம். அன்பர், செம்மையானஅறிவை விரும்பிச்செய்யும். பவளநிறத்தன் நத்தன் வண்ணத்து—அழகிய. ஆனையுடைய அத்தன்.

வின்மைந்தர்தோளுமன்றின்மேவினர்க்குச்சார்வினையுஞ்
சென்மந்தரமலைக்குந் தில்லையே—வன்மஞ்செ
யுண்மா தடுத்தா ருழுவலன்பர்க் கோர்மேனி
யுண்மா தடுத்தா ருறை. (௪௯)

தோள், செல்படியின்ற மந்தரமலையை அலைக்கும். வினை, பிறவி தருதற்கு அஞ்சும். அன்பர்க்கு வர்மஞ்செய்கின்ற உள்ளக்கருமையைத்தடுத்தார்

எவ்வங்கொள் காமுகர்பா லின்மதனு நந்தனமுஞ்
செவ்வந்திப் போதடுக்குந் தில்லையே—பௌவஞ்சேர்
மாவிடத்தார் கந்தரத்தர் மன்னிமயத் தன்னைபமர்
மாவிடத்தார் கந்தரத்தர் வாழ்வு. (௫௦)

மதன், அந்திநேரத்தில் அடுக்கும். மா விடம்—கரிய விடம். அன்னை அமர் மகத்தாகிய இடப்பாகர். கந்தர்அத்தர். கம் தரத்தர் எனினுமாம்.

கீரத்த வானிலையுங் கேதமறு மாதவருந்
தீரத்த வம்பயிலுந் தில்லையே—யீரத்த

வானம் பரித்தார் மதிமுடியார் நஞ்சருந்தி
வானம் பரித்தார் மனை. (ருக)

ஆனிரை, நீர்க்கரையிலுள்ள அம்பு அயிலும். மாதவர் மிகத்தவஞ்செய்யும். தீரத்துடன் செய்யும் எனினுமாம். ஈரமுள்ள மேலான அம்பு—கங்கை. அரித்தார்—பாம்பாகிய மாலை. அருந்தி வானுலகைத்தாங்கினவர்.

அம்மடவா ரம்மமுழ வாயினரு மாய்பொழிலுஞ்
செம்மலையா ரம்மடுக்குந் தில்லையே—மும்மலமும்
போகத்தான் போற்றும் புனிதர்க் கினிதநன்மெய்ப்
போகத்தான் போற்றும் புரம். (ருஉ)

அம்மம்—முலை. அது, செம்மையான மலையையொத்த அம் அடுக்கும். மலையிலுள்ள ஆரம் அடுக்கப்பெறும் எனினுமாம். ஆயினர்-தாய்மார். அவர்கள், பிள்ளைகளை ஊண் நுகரும்படி ஊட்டும். பொழில், பழம்பூக்களை நிலம்பொருந்த நிறைக்கும். போற்றும் புரம்-பேணும் ஊர்.

ஓரரயர் தொழுங்க மூர்ப்பொழிலு மம்பலமுஞ்
சீராக மஞ்சாருந் தில்லையே—யோரார்
திருநட்ட மாடினன் சேரார் புரம்பி
திருநட்ட மாடினன் சேர்வு. (ருங)

தொழுங்கள், சீர் ஆகமம் சாரும். கமம்-நிறைவு. பொழில். சீ ராக மஞ்சு ஆரும். சீ—இலக்குமி. ராகம்-விருப்பம். அம்பலம், சீர் ஒலியுள்ள ஆகமம் சாரும். பிதிரும் நட்டம் ஆடினன் பொடியாகிய நஷ்டத்தைச்செய்தவன்.

ஓதியமெய்த் தொண்டிடத்து மொண்மா ணவரகத்துஞ்
சேதிமத்த ரற்படுக்குந் தில்லையே—மூதிமய
மங்கையமர் வாமத்தன் வாங்கியவிற் பொன்னோதி
மங்கையமர் வாமத்தன் வாழ்வு. (ருச)

சேதிமத்தர் கோயிற்பணியாளர். அவர்கள், தொண்டினிடத்து அற்பு அடுக்கும். சேதி மத்தர்—மத்தவியல்பைச் சேதிக்கின்றவர். மத்தவியல்பு-மயக்கத்தைச்செய்யுமலத்தினியல்பு. அப்பெரியார், மாணவரிடத்துள்ள அல்லைப்படுக்கும். பொன் ஓதிமம்-பொன் மலை. வாமம்—அழகு.

பொங்குசித்தர் மார்பகமும் போரயரும் வீரர்களுஞ்
சிங்கநா தம்படுக்குந் தில்லையே—கங்கைநதி
வேணியான் பாணியான் வேட்டார்க் கருண்ஞான
வேணியான் பாணியான் வீடு. (ருரு)

சித்தர், மார்பில் சிங்காதமென்னும் அணியை அணியும். வீரர், சிங்கத் தொனிசெய்யும். பாணியானைப் வேட்டார்க்கு அருள் என்க. பாணித்தல்—தாமசித்தல். ஞானவேணி-ஞானகாசம் ஆன் பாணியான இடபக்கொடி தரித்த கையான்.

ஒள்ளிழையார் சொல்விழியு மோம்புமனை பான்மகவுந்
தெள்விளியா லங்கடுக்குந் தில்லையே—கள்ளிதழித்
தாரான் றரப்பணியான் றன்னடையார்க் கின்னருளைத்
தாரான் றரப்பணியான் சார்பு. (௫௬)

சொல், தெள்விளிப்பண்ணையும்-விழி, ஆலத்தையும் ஒக்கும். மகவு, தெளிவாகிய அழைப்பினால் அங்கு அடுக்கும். தரம் பணி மேலாகிய பாம்பு. தரம்பணி-சிரசுகளாகிய ஆபரணம். தரம்-சிரசு.

கந்தமலர்ச் சோலைகளுங் கற்குநருஞ் சற்குருவுஞ்
சிந்தனைய வங்கடக்குந் தில்லையே—முந்துமறை
யீசான சத்தத்த னென்றோது மன்பர்க்
கீசான சத்தத்தனில். (௫௭)

சோலை, சிந்து அனைய அம் கள் தக்கும். சிந்து—கடல். கற்குநர், சிந்தனை அவம் கடக்கும். குரு, சிந்து அல்லைய அங்கு அடக்கும். ஈசானசப்தவாச்சியன். அன்பர்க்கு ஈகின்ற சானசத்தாகிய அத்தன். சானம்—தியானம்.

பம்புமடி யார்மலத்தைப் பாற்றுநரும் வீக்கலருஞ்
செம்பிரச முண்டெனச்செய் தில்லையே—நம்பு
மறைப்பரிய வாகனத்தன் மாண்டமனத் தாருண்
மறைப்பரிய வாகனத்தன் வாழ்வு. (௫௮)

பாற்றுநர், செம்பு இரசமுண்டால் பொன்னாதல் போலச்செய். வீக்கு-வண்டுகளுக்கு.அலர், சிவந்ததேனை உண்ணச்செய். மறைப்பரி அவ்வாகனத்தன். மனத்தாருள் மறைப்பு அரிய வாகன் அத்தன்.

விற்புருவத் தார்தனமு மேவியநூற் காவியருஞ்
செப்பங் கடுக்குஞ்சீர்த்—தில்லையே யப்பமருஞ்
சேகரனார் மாகரனார் தீர்ந்தவிவேண் டப்படர்செய்
சேகரனார் மாகரனார் சேர்வு. (௫௯)

தனம், அம் செப்பு ஒக்கும். காவியர், சொற்களை அடுக்கும். மாகர், (சிவ நிந்தனைசெய்த தக்கனையாகத்து) அந்நாணீர்ந்து அவிவேண்டிச்சென்ற சிவத்துரோகத்தால் தண்டனைசெய்தசேது அரனுர். மாகரனுர். சேகு-வயிரம். மா-மிருகம். இது பொதுவாயினும் மானுக்குச் சிறப்புப்பெயர்.

கவ்வை யகல்பணியுங் காரிகையார் சீர்நடமுஞ்
செவ்வி யரங்காற்றுந் தில்லையே—நவ்விமழு
வாளக் கரத்தார் மறைக்குளுயி ராமைந்து
வாளக் கரத்தார் மனே. (௬௦)

கவ்வை- துன்பம். செவ்வியர் அங்கு பணி ஆற்றும். மழுவாள்—மழு வாயுதம்; வாள்-ஒளி.

போமங்க ளாதுலரும் பூவராசா லேவர்களுஞ்
சேமங் கடவாத தில்லையே—வாமஞ்சார்
மாதரார் காதரவன் வந்திப்பார்க் காதரவன்
மாதரார் காதரவன் வாழ்வு. (௬௧)

வேற்றிடங்களிலிருந்து அங்கட்போகிய ஆதுலரும், சேமங்கள்தவாத. சேமம—சுகம். அதனால் யாவரும் காவல் கடவாத. மாதர் ஆர் காது அரவ ன். மாதர்—அழகு.

உந்தாயர் மாலையினு மோவறுகூ டங்களினுஞ்
சிந்தாத்தந் தாவளஞ்சேர் தில்லையே—மைந்தா
ரிலங்கையனை யப்படுத்தானில்லம்பே றுக்கொண்
டிலங்கையனை யப்படுத்தா னில். (௬௨)

(காலையிற்புறத்தே) செலுத்தியஆயர், சிந்து ஆ—அங்கங்கேசிதறிநின்று மேய்கின்ற ஆக்களை. (மாலையில்) தத்தம் தாவளங்களிற் சேர்க்கின்ற. கூடங்களில் வலிகெடாத தந்தாவளஞ்சேர்கின்ற. கொண்டு இலங்கு ஐயன் நயப்பு அடுத்தான்.

பொன்னம் பலத்துமங்குப் போநவரன் பேந்தகத்துஞ்
சின்னம் படக்குஞ்சேர் தில்லையே—சென்னிப்
படர்நீத்த வம்புலியான் பண்டுதக்க னுற்றேய்ப்
படர்நீத்த வம்புலியான் பற்று. (௬௩)

அம்பலத்து வாத்தியங்கள் ஒலிக்கும். போநவர், அகத்திற் சிறுமை நீக்கும். சென்னியிற்படர்ந்த நீத்தமாகிய அம் புலியவன். தேய் படர்-தேய்ந்த துன்பம்.

பூணாந் தூரங்கம் புனைவோரும் பொற்கொடியுஞ்
சேணந் தரமார்க்குந் தில்லையே—காணந்தோய்
பூதரமாங் கோதண்டன் பொன்றுமலங் குன்று பல
பூதரமாங் கோதண்டன் பொற்பு. (௬௪)

அம் தூரங்கத்துக்குப் பூண் புனைவோர், சேணம் தரமாக ஆர்க்கும். கொடி தூரித்த அந்தரத்தில் ஆர்க்கும். காணம் தோய் பூதரம்–பொன்மலை. பலபூதர்–பலபரிசுத்தர். அவர்கள், தன் அம் ஆங்கு ஒது அண்டன் அம்–ஈண்டுமைகிமை.

சுற்றெயிலிற் சூழ்பொறியுஞ் சூட்டணமார் கோட்டகமுஞ்
செற்றலரை யங்காட்டுந் தில்லையே—யுற்றுணர்ந்தார்க்
காதரனார் நீதரனார் காணார்கா ணார்முழுதுங்
காதரனார் நீதரனார் காப்பு. (௬௫)

பொறி, பகைவரை அங்கு ஆட்டும். கோட்டகம்–வாவி. நெருங்கிய அலர் அம் காட்டும். உணர்ந்தாரைக்காக்கின்ற தானுள்ளவர். உணர்ந்தாரிடத்து விருப்பமுள்ளவரெனினுமாம். நீதர் அந் நாக்காணாரால் காணப்படாதவர். முழுதும் காது அரனார். நீ தானார்.

பாகமுனி வோர்கையும் பைங்கொடியா ரங்கையுஞ்
சிகரமங் காட்டுஞ்சீர்த் தில்லையே—தேகமிள
மையுடனி லாவென்றார் மாண்மனத்தார் காண்விழிசெம்
மையுடனி லாவென்றார் வாழ்வு. (௬௬)

முனிவர்கை, அம் சிகரம்காட்டும். சிகரம்-கமண்டலம். கொடியார் கை, இலக்குமிகரம் அம் காட்டும். தேகம் இளமை உடல் நில்லாவென்று (வெறுத்து) மேலார்ந்த மாண்மனத்தில் வசிப்பவர். உடல்–பொன. விழி, செம்மையாகிய அக்கினியுடன் நிலாவும் என்று மாக்கொண்டவர்.

மானம் பறந்தலையு மானார்கண் கந்தரமுஞ்
சேனந் தலைச்சேர்க்குந் தில்லையே—யானந்த
தாண்டவத்தை யாற்றுவான் றண்ணருளானன்னெறியான்
றாண்டவத்தை யாற்றுவான் சார்பு. (௬௭)

பறந்தலை, சேனமுதலிய பறவைகளைத்தன்னிடத்துசேர்க்கும். கண்ணும் கண்டமும், முறையே சேலையும்சங்கையும் அலைத்து ஏர்செய்யும். யான் நன்னெறியைத்தாண்டும் அவத்தைத் தணிப்பான்.

அல்வென்ற மாடமுமல் லாநெறியிற் காவலருஞ்
செல்வந் தடுக்குஞ்சீர்த் தில்லையே—வில்வ
முறுமேச காரு ருவணைத் துசங்கை
யுறுமேச காரு ருழை. (௬௮)

மாடம், செல் வந்து அடுக்கப்பெறும். காவலர், தர்மமல்லாதவழியில் வருஞ்செல்வத்தைதடுக்கும். துசம்கை யுறு விஷ்ணுவாகிய இடபக்கொடி தரித்த காரூர்.

தம்பரத மாநடமுந் தாவில்பல மாளிகையுஞ்
செம்பொன்னி னம்பலஞ்சேர் தில்லையே—யும்பரச்சத்
தாலந் தரித்தா ரலறவருள் கூர்ந்துகண்டத்
தாலந் தரித்தா ரகம். (௬௯)

மாளிகை, செவ்விய இலக்குமியின் அழகியபலம் சேர். அச்சத்தால் அர தரித்தவர்களாய் அலற.

தெவ்வாண்மை சிந்தரசர் செல்வர்களுஞ் செல்வர்களுஞ்
செவ்வேளாண் மையமருந் தில்லையே—யொவ்வாப்
பரசமயக் கோளரியார் பண்பெறுகற் றங்குப்
பரசமயக் கோளரியார் பற்று. (௭0)

அரசகுமாரர் வேளின் ஆண்மையைப்பொருந்தும். செல்வர், செவ்விய கொடையைவிரும்பும். கற்றங்கெரி என்றபதிகத்தாற் பரசுதலமைந்த அக் கோள் அரியார். கோள்—குற்றம்.

யோகாங்க ளாற்றுநரு மும்பரமா பலமுந்
தேகாந்து யங்கெடுக்குந் தில்லையே—சீகாழிச்
சம்பந்த ரத்தர் தளர்ந்தரிபின் றேர்ந்தேத்துஞ்
சம்பந்த ரத்தர் தலம். (௭௧)

யோகம் ஆற்றுநர், தேகமுடிவைக்கெடுக்கும். அம்பலம், தெய்விககாந்தியை எடுத்து வீசும். அரி, (நானே பிரமமெனவெண்ணிய சிவத்துரோகத்தால் பாதலங்கடந்தும் பாதங்காணாது) தளர்ந்து (பின் நான் அடிமையே. சிவனே பிரமம் என்றுண்மை.) தேர்ந்து ஏத்திய சம்பு அந்தரத்தர்.

நேசஞ்செய் மாதவரு நீடுபொருட் பீடிகையுந்
தேசம் பலமருவுந் தில்லையே—பேசுமின

மைந்தனஞ் சம்பந்தன் வாக்கமுதுண்டான் மிடற்ற
மைந்தனஞ் சம்பந்தன் வாழ்வு. (எஉ)

பிடிகை-கடைவீதி. அதில் பலதேசத்தார்மருவும். மிடற்று அமைந்த கஞ்சம் பந்தன்.

ஓதங் கழனிபிற்றே னும்பரதர் தம்பொருளுஞ்
சேதங் கடக்குஞ்சீர்த் தில்லையே—மேதையுழ
வாரப்படையத்தர் வாகீசர் வாழ்த்துமுடி
வாரப் படையத்தர் வாழ்வு. (எஙூ)

தேன் சேது, அங்குஅடக்கும். சேது-வரம்பு. பரதர்-வைசியர். ஞான மேவடிவாயமைந்த உழவாரம். முடியில் மேனின்று வார்ந்த அப்பு அடைத்த அத்தர்.

உந்தா ரிசைக்கிடையு முற்றவர்பா னற்றவருஞ்
சிந்தா குலமற்றுந் தில்லையே—மைந்தார்கல்
லேமதலே யாகத்தன் னெய்தினர்க்கான் சூற்பொ,ாத்தா
னேமதலே யாகத்த னில். (எச)

இடை, சிந்துபோன்றபேரொலியைச்செய். கல்லே தெப்பமாக. ஏம மதலை-பொன்னிறக்கொண்றை. எமம் ஈறுகெட்டது.

மாகமருங் காவகமும் வாகமரு மாகவமுஞ்
சேகரங்க ணூற்றுஞ்சீர்த் தில்லையே—சாகரஞ்சார்
மைக்கடுக்கை யாரத்தான் வாங்கினர்க்குச் சந்துசென்மா
மைக்கடுக்கை யாரத்தான் வாழ்வு. (எரு)

காவகம், சேகரம் கள்நாற்றும். சேகரம்-மாமரம். ஆகவம். சேகர் அங்கண் ஆற்றும். ஆகவம்-போர். சேகர்—வயிரித்தகுணத்தர். மைக்கடுவைத்தான் ஆரக்கையால் வாங்கின சுந்தரர்க்கு. மாமை—அழகு.

தூவனத்த வாரகளுந் தொய்யின் முலைத் தையலருஞ்
சேவனமுற் றேயுஞ்சீர்த் தில்லையே—நாவலூர்
வேதியனங் கற்படுத்தான் மெய்ந்நெறிச்செல் லாதவனை
வேதியனங் கற்படுத்தான் வீடு. (எசு)

வெள்ளிய அன்னப்பறவைகளையுடைய வாவிகள், சிவனை முழுதும் நி றையப்பெறும். சிவனம்-நீர். மதையலர், இலக்குமியின் அழகுற்று யயும். காவலூர்ச்(சிவ)வேதியனது அற்பு அங்கு அடுக்கப்பெற்றவன்.

வெளவா ரலர்த்தடமும் வைகறையு மெய்கிடையுஞ்
செவ்வார ணத்திசையார் தில்லையே—யவ்வாத
வூராரை வீட்டினு ரும்பாச முன்பதித்த
ரூராரை வீட்டினு ரூர். (எஎ)

தடம், செவ்விய வாரணத்து இசையார். வாரணம்—சங்கு. வைகறை, சிவந்தகோழி இசையார். கிடை, நேரிய ஆரணத்திசையார். ஆரும்பாச வீட்டிற்பதித்தார். ஊர்கின்ற மும்மதிலை வீட்டினூர்.

சேயமா புயையனையார் சிற்றிடையு முற்றகமுஞ்
சீயங் கடுக்குஞ்சீர்த் தில்லையே—மேயவன்பர்
பாடுதிரு வாசகத்தர் பைங்கொன்றை யந்தாது
பாடுதிரு வாசகத்தர் பற்று (எஅ)

முற்றகமும், சீ அங்கு அடுக்கும். தாது பக்கத்தில் உதிருகின்ற யாசனை பொருந்திய தோளர்.

மாகா முகரிடமும் வாவியும்பண் பாடுநரும்
சீகாம ரம்பாடுந் தில்லையே—வாகா
ரியற்பகையார் பாலேற்று ரேந்திழையைப் போந்தென்
னியற்பகையார் பாலேற்று ரில். (எகூ)

காமுகரிடம், வென்றவரால் இழித்துக்கூறப்படும் காமருடைய அம்பு ஆடலைச்செய்யும். வாவி, இலக்குமிவாசமலர் செறிந்த அழகிய நீர் ஆடும். போந்து—அருள்கூர்ந்துவந்து. என் இயல் பகு ஐயார் தற்போதம் நீக்கிய தலைவர். பால் ஏற்றூர்—வெள்விடையார்.

தேவியன்மெய் யன்பர்களுந் தீநெறிச்சா ரைம்புலமுந்
தீவிரத ரங்காட்டுந் தில்லையே—கோவணமே
ராத்தரா சேறுடையார்க் காங்கதுவே பாங்கமைத்தா
ராத்தரா சேறுடையா ரூர்வு. (அ0)

அன்பர்கள், தீவிரதரபக்குவம்காட்டும். ஐம்புலம், அக்கினிபோன்ற பரிசுத்தவிரதர்களால் அங்கு வருத்தித்தம்வசமாக்கப்படும். கோரதற்பொ

ருட்டுச்சூராசின்மேல் ஏறுதலில் மனம் உடையாதவர்க்கு, அத்தூராசேடிரி யவிமானமாக அமைத்தவர்—ஆப்தர். ஆசு ஏறுடையார். ஆசு-விரைவு.

உந்துபொழி லின்கணிறு லுந்தகைய மைந்தர்களுஞ்
செந்தினக ரன்புரையுந் தில்லையே—சந்தப்
பணியாற்று மூர்த்தியார்ப் பார்பரிக்கென் றேவும்
பணியாற்று மூர்த்தியார் பற்று. (அக)

இறால்—தேன்கூடு. அது, சூரியனையொக்கும், மைந்தர், செந்தில்நகரனை யொக்கும். சந்தனத்தொண்டுசெய்தமூர்த்தியாரைப் பூமிபாரந்தாங்குகளென்று ஏவிய பாம்புசுமக்குதிருமேனியர்.

போரா டவர்மார்பும் பூந்தடமும் பல்பொருளுஞ்
சீரா வணந்தேங்குந் தில்லையே—பாராத
காதலங்கண் ணப்பனார் கான்றவமு துண்டாரென்
காதலங்கண் ணப்பனார் காப்பு. (அஉ)

மார்பு, சீராவின் அழகுநிறையும். சீரா—கவசம். தடம், சீராக வள்நந்து தங்கும். பொருள், சீர் ஆவணத்தில் நிறையும். சீர்—ஒலி. என்அல் காது அங்கண் அப்பனார்.

கொங்கார்கான் வேட்டுவருங் கோமறுகிற் காளையருஞ்
சிங்காரமாக வருந் தில்லையே—வங்கியக்கை
யானுப னாரிசையா ரஞ்செவியார் மஞ்சனமா
லானைய னாரிசையா ரார்வு. (அங)

வேட்டுவர் சிங்கு ஆர மாகவரும். சிங்கு—கொலை. மஞ்சு அன்ன மாலாகிய ஆனையுடைய நாயனார் கீர்த்தியுடையார்.

தையலர்க டங்களனுஞ் சங்கீதர் தங்களனுஞ்
செய்யகாந் தாரமுறுந் தில்லையே—மெய்யுணர்ந்தா
ரம்மையா ரம்மிடற்று ரற்புதவந் தாதியா
ரம்மையா ரம்மிடற்று ரார்வு. (அச)

தையலர்களம், சிவந்த காந்தியைச்செய்கின்ற ரத்தின ஆரங்கள்மிகும். மெய்யுணர்ந்து (பொய்யையுதறிவிட்டுக்கயிலையில்வந்து தம்மடியில்) ஆர்ந்த அம்மையாருடைய அழகும் வலியுமுள்ள தாராகிய அந்தாதியையுடையவர்.

வருற்ற மஞ்சனமு மெய்ம்மறையோ ரும்மாணிச்
சீருத் திரமாடுந் தில்லையே—யோருமப்பர்க்
காமருமப் பூதியார் கண்ணுவந்தா ரெண்ணினரைக்
காமருமப் பூதியார் காப்பு. [அரு]

திருமஞ்சனம், ஆனிமாசத்துச்சிறந்த உத்திரநாளில் ஆடப்பெறும். மறையோர், மாணி-பெருமையுடைய ஸ்ரீருத்திரம் செபிக்கும். ஆடுதல்-சொல்லுதல். எண்ணினரைக்காக்கின்றவர் மரும்த்திற் (பாவப்பூசிய)விபூதியார்.

ஆரியபொன் வண்ணத்தந் தாதியுங்கா ரன்பர்களுஞ்
சேரலர்நா ரானவிற்றுந் தில்லையே—மாரனுட
லீருக்கு மம்பகத்த னீருக்கப் போந்தவிட
நீருக்கு மம்பகத்த னேர்வு. [அசு]

சேரலர், அந்தாதியை நாரால் நவிற்றும். நார் அன்பு. அன்பர், சேர்ந்த அலர்களைக்கொண்டு நாரினால் தார்செய்யும். (எவற்றையுஞ்)சாம்பலாக்கும் படிவந்தவிடத்தினது நீல்நிறந்தாக்கப்பெற்றவிஷ்ணுவாகியஅம்ப கத்தன்.

பையதுணைச் சேவல்களும் பாவலர்க ளுவகமுஞ்
செய்புண் மணமேவுந் தில்லையே—மெய்யன்
புடையார் கணம்புலனு ரொண்டிறல்கண் டேபண்
புடையார் கணம்புலனு ரூர். [அஎ]

துணையுடன்கூடியசேவல்கள், செய்களில்மணம் விரும்பும். மேவல்--விரும்பல். மெய்அன்பு உடையாதவராகியகணம்புல்லநாயனாருடைய ஒள்ளியதிடபத்தியைக்கண்டு அருளீந்த பண்புடையவர். கண அம் புல்லனூர்--தியானிக்கத்தக்க அழகிய இடபத்தையுடையவர். புல்லம்-இடபம்.

நாரணிளங் கோக்களு முன்னர்ப்பரவும் விப்பிரருஞ்
சீரணவுந் தாரணஞ்செய் தில்லையே—பேரமைச்சர்
மங்கையர்க ளுபகியார் வாழ்த்தவழித் தாரமண்ட
மங்கையர்க ளுபகியார் வாழ்வு. [அஅ]

நார் அண் இளங்கோக்கள், சீரேறுத்தாரணஞ்செய். சந்நிதியிற்றுதிக்கின்றபிராமணர், சீர் அணவு உத்தர ஆரண(கோஷஞ்)செய். வாழ்த்த-வேண்டிக்கொள்ள. அமண்தமம்அழித்தார். கண் ஆய் அகி ஆர் கையர்--மதிப்புள்ளதாய்கின்றபாம்பு ஆர் கையினர்.

தூக்குலகெ லாமுதலுந் தூயோர் பரத்துவமுஞ்
சேக்கிழார்க் கென்றோதுந் தில்லையே—சாக்கியனார்
கற்றூர் மனம்புரத்தார் காசறுமெய் கண்டமுன்னூல்
கற்றூர் மனம்புரத்தார் காப்பு. [அகூ]

உலகெலாம் என்று தூக்குமுதல் சேக்கிழார்க்காக ஓதும். தூக்கு-பாட்டு. பரிசுத்தர்களாகிய பெரியோர்கள் சேவுக்குரிய சிவனுக்கே பரத்துவமுண்டென்றோதும். சாக்கியர் எறிந்த கல்லாகிய பூமன்னிய அழகியமேனியர். தார்-பூ. முன்னூல் கற்றவர்கள் மிகநம்பு உரத்தார். உரம்-ஞானம்.

நாவையர்சீர்த் தொண்டர்புரா ணஞ்செயலற்குந் தஞ்சுறற்
சேவையர்கோ மான்மேவுந் தில்லையே—மேவை [குஞ்
யரியமருந் தாண்டவத்த னைய்ந்தமைந்தா ராரு
மரியமருந் தாண்டவத்த னார்வு. [கூ0]

நாவினாற் செய்யப்படும் புராணம் என்க. அயர்தல்—செய்தல். தஞ்சு-புற்றுக்கோடு. சேவையர்—சேவிப்பவர். கோ மால்--மேலாகிய ஆசை. மேவு ஐ அரி அமரும்-(சிவாஞ்ஞையின்படி) வந்த அழகிய பாம்பு விரும்பும், ஆரும் அரிய மருந்து ஆண்ட அத்தன்.

நாறு திசைப்பொழிலு நன்னெறியின் மன்னினருந்
தேறன் மலரகஞ்சார் தில்லையே—யாறுமதி
சென்னிக் கிசைத்தார்முன் சேக்கிழார் பாற்கருணை
சென்னிக் கிசைத்தார் செறிவு. [கூக]

திசையளவு நாறு பொழில், தேன்மலர் தன்னிடஞ்சாரப்பெறும். மன்னினர், தெளிவாய் விரிந்த மனஞ்சாரும். ஆறுமதிகளைச் சென்னியிற் பொருத்தினவர். கருணையை அனபாய சோழற்கு இசைத்தவர்.

தையலர்கண் மொய்ம்முலையுந் தாம்பலமீன் வாம்பணையுஞ்
செய்யுகலங் காட்டுஞ்சீர்த் தில்லையே—துய்யவெண்ணெய்
மெய்கண்ட தேசிகனார் மெய்ப்போதத் தாருளான்
மெய்கண்ட தேசிகனார் வீடு [கூ௨]

நெருங்கியமுலைகள், செவ்விய ஆபரணங்காட்டும். மீன்கள்தாவுகின்ற மருதநிலம், செய்களின் விரிவைக்காட்டும். மெய்ப்போதத்தையுடையார், அருளால் திருமேனி செய்துகொண்டகூத்தர். தேசிகம்-கூத்து.

மேதகைய மாதவரு மேவுமவர் பாவுளமுஞ்
சேத நமன்பணிகொ டில்லையே—மேதை
யருணந் திவளத்தன் ருசாற்சார்ந் தோர்மெய்
யருணந் திவளத்த ஞர்வு. [௬௩]

மாதவர், (உயிர்களை உடலிற்பிரிக்கின்ற) சேதஞ்செய்யும் நமனுடைய பணிகொள்கின்ற. பார்த உள்ளம், சேதனமும் அன்பும் அணியாக்கொள்கின்ற. அருணந்திசிவாசாரியர், மேதை வளத்துடன் அன்று ஆசானை அடுத்து ஓர்ந்துணர்ந்த அருணம் திவள்மெய் அத்தன். மேதை-ஞானம்.

கூர்ந்தமழ வாயிரர்தீக் குண்டமுநன் மைந்தர்களுஞ்
சேர்ந்த னலங்கெழுஞ்சீர்த் தில்லையே—வார்ந்தசெவி
வாய மனத்தார் மறைஞான சம்பந்தர்
வாய மனத்தார் மனை. [௬௪]

தீக்குண்டம், சேர்ந்து அனல் அங்கு எழப்பெறும், செவிவாய் அமலநத்தார். அமலுதல்—பொருந்துதல், நத்து—சங்ககுண்டலம். வாயமனம்-உண்மையுடையமனம்.

மேவினர்பாற் போர்தகரு மேதவினை வேதிகளுந்
தீவினையங் காட்டுஞ்சீர்த் தில்லையே—மேவுமுடி
யுள்ள முகந்தா ருமாபதியார் பூசனைகொண்
டுள்ள முகந்தா ருறை. [௬௫]

மேதம்-யாகம். வேதி—குண்டம். தீ வில் நயம் காட்டும், முடியுள் அம் முகந்தார்—முடியில் கங்கையை முகந்தவர்.

ஆரியத போவனமு மாவணமு மோனருமாற்
சீரை யரைச்சேர்க்குந் தில்லையே—நாரைநம்பி
யாண்டார்பண் பாடலா ரன்புளத்தார்க் கின்புருவா
யாண்டார்பண் பாடலா ரார்வு. [௬௬]

வனம், மால் சீர் ஐயரைச்சேர்க்கும். மால்—பெருமை. ஆவணம், மேகலையை அரைச்சு ஏர்க்கும். மோனர், மரவுரியை அரையிற்சேர்க்கும். ஆல்—அசை. இன்புருவாய் ஆண்டு ஆர் பண்பு ஆடலார். ஆண்டு—அவ்விடம். பண்பு-குணம். ஆடல்-கூத்து. வெற்றியுமாம்.

மீகுலவு சோலைகளு மின்னுமுடி மன்னவருஞ்
சீகரமங் கண்மேவுந் தில்லையே—வாகமர்சு
வேதவன நாமத்தார் மேவுமக வாயுணர்த்தார்
வேதவன நாமத்தார் வீடு. [கூள

சோலைகள், அம் கண் சீகரம்-அழகும் தேன்றுளியும்மேவும். மன்னவ
இலக்குமிகரமும் அங்கண்ணும் மேவும். அங்கண்-இரக்கம். சுவேதவன
நாமத்தார்-பட்டினத்தடிகள். அவரால் விரும்பப்படுமகவாய்ச் சென்று
முடிவில் ஞானோபதேசஞ்செய்தவர். வேதத்தால் (எடுத்துக்கூறப்பெறும்
அழகியகீர்த்தியுடையார். நாமம்-கீர்த்தி.

திவ்விய நூல் வேதியருந் தேவரும் பாவலருஞ்
செவ்வியமகம்மாற்றுந் தில்லையே—வெவ்வியகா
கோதரத்த வேணியார் கோட்டிமயத் தாய்நீலக்
கோதரத்த வேணியார் கூர்வு. [கூ௨

வேதியர், செவ்விய மகம் ஆற்றும். தெய்வத்தன்மைவிளங்கும் பாவல
செவ்வி யமகம் ஆற்றும். செவ்வி-அழகு. காகோதரம்-பாம்பு. நீலக்கோ-க
ங்கண். தரத்த அக்கண்போன்ற. ஏணி-மான்.

வாறுறு போம்பொழிலு மல்குமல ரல்லிகளுந்
தேனாறு கால்பாயுந் தில்லையே—யாறுறு
கேதனத்தன் போதனத்தன் கேதநத்தப் போதுபொன்
கேதனத்தன் போதனத்தன் கேள். [கூக

பொழில், தேன்நதிபாயப்பெறும். மலர்களின் அகவிதழில், தேன்-வ
களின் ஆறுகால்பாயும். ஆன் நாறு-விடைதோன்றுகொடியுடையான்
போதனும் நத்தனும் தமதுகேதம் நத்தும்படிசெல்கின்ற பொன்நிகேத
த்தன். போதன் அத்தன். நிகேதனம்-கோயில்.

துங்கமுலை யார்கைச் சுகமு மகவினமுஞ்
செங்கீரை யாடுஞ்சீர்த் தில்லையே—பங்க யங்கு
ணிமயவரை யாளிடத்தா ரேத்தியடி போற்று
மிமயவரை யாளிடத்தா ரில். [க0

சுகம், செவ்வியசொல்லைப்பேசும். கீர்-சொல். இமயவரையாளை இட
பாகத்திற்கொண்டவர். போற்றும் இமயவரை ஆளுகின்ற கயிலையிட
தார்.

தில்லைச் சிலேடைவெண்பா முற்றிற்று.

# அப்போஸ்தலருடைய

# நடபடிகள்

## க—ம் அதிகாரம்

1 தெயோப்பிலுவே, இயேசுவானவர் தாம் தெரிந்துகொ
ண்ட அப்போஸ்தலருக்குப் பரிசுத்த ஆவியினாலே கட்டளை
2 யிட்டபின்பு, — அவர் எடுத்துக்கொள்ளப்பட்ட நாள்
வரைக்கும் செய்யவும் உபதேசிக்கவும் தொடங்கின எல்லா
வற்றையுங்குறித்து, முதலாம் பிரபந்தத்தை உண்டுபண்ணி
னேன்.

3 அவர் பாடுபட்டபின்பு, நாற்பது நாளளவும் அப்போஸ்தல
ருக்குத் தரிசனமாகி, தேவனுடைய ராஜ்யத்துக்குரியவை
களை அவர்களுடனே பேசி, அநேகந் தெளிவான திருஷ்டாந்
தங்களினாலே அவர்களுக்குத் தம்மை உயிரோடிருக்கிற
4 வராகக் காண்பித்தார்.—அன்றியும், அவர் அவர்களுடனே
கூடிவந்திருக்கும்போது, அவர்களை நோக்கி, யோவான்
ஜலத்தினாலே ஞானஸ்நானங் கொடுத்தான்; நீங்கள் சில
நாளுக்குள்ளே பரிசுத்த ஆவியினாலே ஞானஸ்நானம் பெறு
5 வீர்கள்.—ஆகையால் நீங்கள் எருசலேமை விட்டுப் போகா
மல் என்னிடத்தில் கேள்விப்பட்ட பிதாவின் வாக்குத்தத்தம்
நிறைவேறக் காத்திருங்கள் என்று கட்டளையிட்டார்.

6 அப்பொழுது கூடிவந்திருந்தவர்கள் அவரை நோக்கி: ஆண்
டவரே, இக்காலத்திலா ராஜ்யத்தை இஸ்ரவேலுக்குத் திரும்
7 பக் கொடுப்பீர் என்று கேட்டார்கள்.—அதற்கு அவர்: பிதா
வானவர் தம்முடைய ஆதீனத்திலே வைத்திருக்கிற காலங்
களையும் வேளைகளையும் அறிகிறது உங்களுக்கு அடுத்த